பெர்சியாவில் உள்ள ஒரு ஊரில் அலிபாபா என்றொரு மனிதன் வாழ்ந்து வந்தான். அவன் ஒரு ஏழை விறகு வெட்டி. ஒவ்வொரு நாளும் தனது மனைவி மற்றும் குழந்தைகளோடு வயிற்றுப்பாட்டிற்கே போராட்டம் தான். அவன் விரும்பியதெல்லாம், ஊரில் ஒரு கடை வைத்து, அண்டை அயலார்க்கு பொருட்களை விற்று, குடும்பத்திற்கு நிறைய சம்பாதிக்க வேண்டும் என்பதே.
ஒரு நாள் அலிபாபா காட்டில் விறகு வெட்டிக் கொண்டிருந்த போது ஒரு பெரும் குதிரைப் படை நெருங்கி வருவதை கண்டான். அலிபாபா அவர்களை கொள்ளையர்கள் என்று நினைத்ததால், கிடுகிடுவென்று ஒரு மரத்தில் ஏறி ஒளிந்து கொண்டான். அலிபாபா அந்த படையில் 40 பேர் இருக்கிறார்கள் என்பதை எண்ணித் தெரிந்துகொண்டான். அவன் மிகவும் கேள்விப்பட்டிருந்த பெர்சியா முழுவதும் அஞ்சி நடுங்கிய கொடூரமான நாற்பது கொள்ளையர்களின் குழுவாக இது இருக்குமோ என்று அவன் பயந்தான்.
அவர்களின் தலைவன் குதிரையை விட்டு இறங்கி ஒரு புதருக்குப் பின்னால் தெரிந்த பெரிய பாறையை நோக்கி நடந்தான். பாறையின் அருகில் சென்று அந்த குண்டன் "திறந்திடு சீசேம்!"என்று கூவுவது அலிபாபாவுக்கு தெளிவாகக் கேட்டது. பாறையின் நடுவில் ஒரு கதவு திறந்தது!





கதவிற்குப் பின் ஒரு ரகசிய குகை இருந்தது. திருடர்களின் தலைவன் முதலில் உள்ளே நுழைந்தான், மற்ற கொள்ளையர்கள் அவனைப் பின்தொடர்ந்தனர். குகையில் இருந்து திருடர்கள் வெளியேறும் வரை அலி பாபா காத்திருந்தான். "மூடிடு சீசேம்!" என்று தலைவன் சொன்னதும் கதவு மூடிக்கொண்டது. பின்னர் திருடர்கள் திரும்பிச் சென்றனர்.

அவர்கள் போய்விட்டார்கள் என்று உறுதியாக தெரிந்தபின் அலிபாபா பாறையின் அருகில் சென்று "திறந்திடு சீசேம்!" என்று சொன்னான். கொள்ளைக்கூட்டத் தலைவனுக்குத் திறந்ததைப் போலவே அதிசயமாக அவனுக்காகவும் கதவு திறந்தது.

அலிபாபா உள்ளே நுழைந்ததும் கண்டது ஒரு மிகப் பெரிய அறையை. அங்கு ஒரு அங்குலம் விடாமல் எங்கு பார்த்தாலும் பல வகையான மதிப்புமிக்க பொருட்கள் நிரப்பப்பட்டிருந்தன. தங்கம்,வெள்ளி, வைர நகைகள் அலி பாபாவின் கண்களை கூச வைத்தன. கொள்ளையர்கள் விரைவில் திரும்பி வந்துவிட்டால்? என்று அஞ்சி, அவன் தூக்கக்கூடிய அளவுக்கு தங்க நகைகளை விரைவாக அள்ளிக் கொண்டான். அவசர அவசரமாக குகையை விட்டு வெளியே வந்தாலும் "மூடிடு சீசேம்!"என்று மறக்காமல் சொல்லிவிட்டுத் தான் வந்தான்.

ரகசிய கதவின் பக்கத்தில் ஒரு தங்க நாணயம் தனது ஆடைகளிலிருந்து விழுந்ததை அலிபாபா கவனிக்கவில்லை. அதிர்ஷ்டவசமாக திருடர்களும் அதே நாளிலோ மறுநாளோ சில பல நாட்களிலோ கவனிக்கவில்லை. சில வாரங்கள் கழித்து கொள்ளைக்கூட்டத் தலைவன் ஒரு நாள் சூரிய ஒளியில் நாணயம் ஒளிர்வதைக் கண்டு விட்டான். மிகவும் கோபத்துடன் "நம் மறைவிடத்தை வெளிப்படுத்தும்படியாக யார் இதை கீழே போட்டது? என்று தனது 39 கொள்ளையர்களைப் பார்த்து கத்தினான்.

திருடர்கள், "தலைவா இதுபோன்ற தவறுகளுக்கான தண்டனை மிகவும் கடுமையானது என்று எங்களுக்குத் தெரியும், நிச்சயமாக நாங்கள் யாரும் இதைச் செய்யவில்லை."என்றனர்.

"அப்படியானால் நம்மை யாரோ பார்த்துவிட்டார்கள்" என்று தலைவன் உறுமினான். அவன் இங்கும் அங்குமாக வேகமாக நடந்தபடியே யோசித்தான். திருடர்கள் அவனை பயத்துடன் நோக்கினார்கள். சில நிமிடங்கள் கழித்து அவன் "ஊரில் புதிதாக யார் பணக்காரர் ஆகியிருக்கிறார் என்று கண்டுபிடிப்போம். அந்த மனிதனும் அவனது குடும்பத்தினரும் சாக வேண்டும்" என்றான்.





இப்போது அலிபாபா தான் கனவு கண்டதுபோல கடையைத் திறந்துவிட்டிருந்தான். அவன் ஒரு நியாயமான, தாராள குணமுள்ள கடைக்காரனாக இருந்தான். குடும்பத்தில் ஒரு குறையும் இல்லாமல், அவன் மகிழ்ச்சியாக வாழ்ந்திருந்தான். அண்டை அயலார் அனைவரும் அவனுடைய நண்பராயினர். அலிபாபா, மோர்கியானா என்ற அழகான, புத்திசாலியான இளம் பெண்ணை உதவியாளராக நியமித்தான். கடையில் தனது வேலையை அவள் விரும்பிச் செய்தாள். மேலும் மோர்கியானா அலிபாபா மீதும் அவனது குடும்பத்தினர் மீதும் மிகவும் அக்கறை கொண்டிருந்தாள்.

ஒரு நாள் ஒரு அந்நியன் கடைக்கு வந்தான். அவன் உரிமையாளர் அலிபாபா பற்றி மோர்கியானாவிடம் பலப்பல கேள்விகளைக் கேட்டான். அந்நியனின் இந்த கேள்விகள் மோர்கியானாவை கவலையடையச் செய்தன. அவள் கடையில் விழிப்புடன் இருக்க வேண்டும் என்று முடிவு செய்தாள். அந்நியன் உண்மையில் மாறுவேடத்தில் வந்த திருடன். திருடன் கொள்ளையர்களின் குகைக்குத் திரும்பி " தலைவா, அவனது பெயர் அலிபாபா. நகரத்தில் புதிதாக கடை வைத்திருக்கிறான். சில வாரங்கள் முன்வரை ஏழை விறகுவெட்டியாய் இருந்தவன்.” என்று சொன்னான்.

"இன்றிரவு திரும்பிச் சென்று அவன் வீட்டுக்கதவில் சுண்ணாம்பால் அடையாளம் போட்டு வை."என்று உத்தரவிட்டான் தலைவன். ”பிறகு நான் இருபது பேருடன் அந்த வீட்டிற்கு சென்று அவன் கதையை முடிக்கிறேன்." என்றான்.

தலைவன் சொன்னது போலவே இருளில் பதுங்கிப் பதுங்கி சென்று அலிபாபாவின் வீட்டுக்கதவில் அடையாளம் போட்டான் அந்த திருடன். ஆனால் அவனுக்குத் தெரியாது புத்திசாலியான மோர்கியானா அவனைப் பார்த்துவிட்டாள் என்பது. மோர்கியானா அவன் போன பிறகு எல்லா வீட்டுக் கதவுகளிலும் அதே அடையாளத்தைப் போட்டு வைத்தாள்!

கொள்ளைக்கூட்டத் தலைவன் இருபது திருடர்களுடன் அன்றிரவு வந்த போது எல்லாக் கதவுகளிலும் அடையாளம் இருந்ததால் எந்த வீட்டை தாக்குவது என்று தெரியாமல் வெட்கத்துடன் திரும்பிப்போனார்கள்.

“இந்தக் காரியத்தை யார் சரியாக செய்யமுடியும்” என்று கோபத்துடன் கேட்டான் தலைவன்.

ஒரு தைரியசாலி திருடன் முன்வந்தான்.

“இந்தா இந்த சிவப்புக்கல்லால் குறி போடு. நான் 30 பேரோடு அலிபாபா வீட்டை தாக்குகிறேன்” என்றான் தலைவன்.





இந்த முறையும் மோர்கியானா எல்லா வீட்டுக் கதவுகளிலும் அதே அடையாளத்தைப் போட்டு வைத்தாள்! திருடர்கள் மறுபடியும் ஏமாந்தார்கள்.
கொள்ளைக்கூட்டத் தலைவன் தனது முழு திறமையையும் அலிபாபாவுக்கு எதிராக பயன்படுத்த முடிவு செய்தான். நாற்பது திருடர்களும் ஒன்று கூடி ஒரு திட்டத்தை உருவாக்கினர். தலைவன் எண்ணெய் வியாபாரியாக வேடம் போட்டுக்கொண்டு 39 பீப்பாய்களை கழுதைகள் மேல் ஏற்றிச் செல்வான். திருடர்கள் பீப்பாய்களுக்குள் ஒளிந்துகொண்டு தங்கள் தலைவனின் சமிக்ஞைக்காக காத்திருப்பார்கள். அருமையான திட்டம் தான்!

அன்று அந்தி சாயும் நேரம் அலிபாபாவின் கடைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். “நாளை சந்தையில் விற்பதற்காக எண்ணெய் கொண்டு வந்திருக்கிறேன். இன்றிரவு நானும் எனது சாமான்களும் பாதுகாப்பாக தங்க ஒரு இடம் வேண்டும். உங்கள் இடத்தில் தங்கலாமா?” என்று நயவஞ்சகத்துடன் கேட்டான் தலைவன்.
தாராள குணமுள்ள அலிபாபா “நிச்சயமாக. உங்கள் சாமான்களை பின்னறையில் வைத்துக்கொள்ளுங்கள். அங்கே கழுதைகளுக்கு புல்லும் இருக்கிறது. பிறகு எங்களுடன் உணவு அருந்த வாருங்கள்” என்று பதிலளித்தான்.

முற்றத்தில், தலைவன் தனது ஆட்களிடம், "என் சமிக்ஞை கிடைத்தவுடன் பீப்பாய்களை விட்டு வெளியே வந்து வீட்டைத் தாக்குங்கள்" என்று கிசுகிசுத்தான்.
அலிபாபா குடும்பத்தின் விருந்தாளிக்கு உணவளிக்க மோர்கியானாவும் உதவினாள். எந்த வியாபாரி சந்தைக்கு இவ்வளவு சீக்கிரம் வருவான் என்று அவள் சந்தேகப்பட்டாள். ஆனால் எண்ணெய் வியாபாரி மிகவும் கண்ணியமானவனாகத் தெரிந்தான். எல்லோரும் படுக்கச் சென்ற பிறகு, மோர்கியானா வீட்டை சுத்தம் செய்யத் தொடங்கும்போது அவளுடைய விளக்கில் எண்ணெய் தீர்ந்து போய்விட்டது. இருட்டில்தான் சுத்தம் செய்ய வேண்டும் என்று அவள் நினைக்கும்போது முற்றத்தில் இருக்கும் எண்ணெய் பீப்பாய்கள் நினைவுக்கு வந்தது. அவள் ஒரு பீப்பாயிடம் போனாள். அதன் உள்ளிருந்து ஒரு குரல் கிசுகிசுத்தது, "நேரமாகி விட்டதா?" மோர்கியானா ஆபத்தை உணர்ந்தாள். அவள், "இன்னும் இல்லை, ஆனால் விரைவில்" என்றாள்.
பின்னர், ஒவ்வொரு பீப்பாயையும் சுற்றி வைக்கோலைப் போட்டு தீயைக் கொளுத்தி விட்டாள். 39 பயந்தாங்கோளி திருடர்களும் இருமிக்கொண்டு பீப்பாய்களிலிருந்து வெளியேறி, தீயிலிருந்து தப்பி ஓடிவிட்டார்கள்.





திருடர்களின் தலைவன் தனது சமிக்ஞையை கொடுத்தபின்னும், அவனது ஆட்கள் யாரும் வரவில்லை. மீண்டும் ஏதோ சறுக்கி விட்டது என்றுணர்ந்த தலைவன் குகைக்குத் திரும்பினான். 39 கொள்ளையர்களில் ஒருவன்கூட அங்கில்லை . எத்தனை நாட்கள் ஆனாலும் பரவாயில்லை தான் மட்டுமே பழிவாங்கலைத் திட்டமிடவும் தனது தந்திரங்களை எல்லாம் பயன்படுத்தவும் முடிவு செய்தான் தலைவன்.

அவன் ஒரு கடை உரிமையாளர் போல மாறுவேடம் போட்டுக்கொண்டு, ஊருக்குள் சென்று, ஒரு சத்திரத்தில் தங்கினான். அலிபாபாவின் கடைக்கு எதிரேயே ஒரு கடையைத் திறந்தான். கோஜியா ஹாசன் என்ற பெயரில் பல மாதங்கள் வாழ்ந்தான். சரியான தருணத்திற்காக காத்திருந்தான்.

சிறிது காலம் கழித்து அலிபாபா புதிய கடை உரிமையாளரை இரவு விருந்திற்கு அழைத்தான். கோஜியா ஹாசன் பெருந்தன்மையுடன் அதை ஏற்றுக்கொண்டு, ஒரு கூடை நிறைய பரிசுப் பொருட்களோடு வந்து அலிபாபாவையும் அவனது குடும்பத்தினரையும் புன்னகையோடு சந்தித்தார்.

நாகரீகமான வெளித்தோற்றத்தில், கோஜியா ஹாசன் தனது ஆடையில் ஒரு குறுவாளை மறைத்து வைத்திருந்தான். அந்த வாள் அலிபாபாவையும் அவரது மகனையும் கொல்வதற்காக.

மோர்கியானா தான் முதலில் குறுவாளைப் பார்த்தாள். அலி பாபாவின் வீட்டுக்கு எண்ணெய் வணிகராக வந்த அதே ஆள் தான் இது என்று கண்டுகொண்டாள்.
மோர்கியானா விரைவாக ஒரு திட்டத்தை யோசித்தாள். அவள் நீளமான  தாவணியும் பாவாடையும் அணிந்து கொண்டு, விருந்தினருக்காக நடனமாட சாப்பாட்டு அறைக்குள் நுழைந்தாள்.
மோர்கியானா நடனமாடிக்கொண்டே கோஜியா ஹாசனுக்கு பின்னால் சென்று தாவணியை லேசாக அனது கைகளில் சுற்றிக் கட்டி பின்னர் வேகமாக இழுத்தாள். அவனால் நகர முடியவில்லை.
"நீ எங்கள் விருந்தாளியை என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கத்தினான் அலிபாபா.
"இவன் உங்கள் எதிரி.உங்களைக் கொல்ல ஒரு குறுவாளை வைத்திருக்கிறான்!“ உடனே அலி பாபாவின் மகன் வாளைக் கைப்பற்றினான். திருடர்களின் தலைவன் சிறையில் அடைக்கப்பட்டான்.
"என் உயிரைக் காப்பாற்றியதற்கு உனக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன் மோர்கியானா. தயவுசெய்து என் மகனை திருமணம் செய்து கொண்டு எங்கள் குடும்பமாகிவிடு." என்று சொன்னான் அலிபாபா .மோர்கியானா ஒப்புக் கொண்டதும், அவர்கள் ஒரு அற்புதமான திருமணம் நடத்திக் கொண்டாடினர்.



# விசுவாசம்



அலிபாபாவிடம் பணியாற்றிய மோர்கியானா மிகவும் விசுவாசமாக இருந்தாள். குடும்பத்தில் ஒரு உறுப்பினராக இல்லாவிட்டாலும் அலிபாபாவிற்கும் அவனது குடும்பத்தினருக்கும் அவள் மீண்டும் மீண்டும் உதவினாள். தன்னிடம் எப்பொழுதும் கருணையுடன் நடந்துகொள்பவர்களுக்கு எந்த தீமையும் நடக்க அனுமதிக்க முடியாது என்று நினைத்தாள். அலிபாபா எப்போதும் அவளை குடும்ப உறுப்பினராகவே நினைத்து நடத்தியதால், அவள் அவனுக்கு விசுவாசமாக இருந்தாள்.

ஒருவருக்கு விசுவாசமாக இருப்பது என்பது கடினமான காலங்களில் கூட அவருடன் நின்று உதவுவது தான். மற்றவர்கள் எல்லோரும் விட்டு விலகினாலும் நீங்கள் அவருடன் நிற்பீர்கள் என்று காட்டுவது தான்.

"விசுவாசமானவர்" என்று சொல்லப்படும் ஒருவரை நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அந்த நபரை விசுவாசமாக்கியது எது?